ஜேம்ஸ்
பாண்ட்
துப்பறியும்,




# கடல் பூதம்!



# கருத்துப் போட்டி எண்-29 முடிவு

"மீன் படை!" சித்திரக் கதை கருத்துப் போட்டியில் கலந்து கொண்டவர்களில் எஸ். கல்யாணசுந்தரம் (புதுடெல்லி), ஜி. கே. தவ்லத் (பரங்கிப்பேட்டை), திருமதி. ஹலீம் (கடலூர்-1), சா. அன்பு நாதன் (மேற்கு தாம்பரம்), கே. ஜெயப்பிரகாஷ் (தையூர்), ஆ. விசாலாட்சி ஆனந்தன் (சென்னை-49), கே.கே. மாலதி (திரு. பட்டினம்), திருமதி. கவுரி கோபாலகிருஷ்ணன் (ஈரோடு-3), இரா. தமிழ்வாணன் (சென்னை-4), குமாரி. பாத்திமா தவஸ்ஸீம் (திருச்சி-1), ஆகியோர் பாராட்டத்தக்க வகையில் கருத்துக்களை எழுதி இருந்தனர்.

மிகச் சிறந்த கருத்தை எழுதி ரூ. 50 பரிசு பெறுபவர்:—

டி. ராஜ்குமார்,
(9-வது வகுப்பு பி பிரிவு),
கார்லே ஆஸ்டல்,
10, எம். இ. எஸ். ரோடு,
கிழக்குத் தாம்பரம்,
சென்னை-59.

அந்த மாணவரின் கருத்து வருமாறு:—

"கடமை, கண்ணியம், கட்டுப்பாடு தவறாத டைகர், ஹென்றி இருவரும், பயங்கரவாதிகள் ஒழிப்பு நிறுவனத் தலைவர் "எக்ஸ்" கட்டளைப்படி, பயங்கரவாதிகளின் தலைவர் பாட்சாவை பிடிக்க அவர் இருக்கும் கப்பலுக்குப் போகிறார்கள். ஆனால் அங்கே இருவரும் பாட்சாவிடம் மாட்டிக் கொள்கின்றனர். பாட்சா தப்பிவிட, கப்பலோடு எரிந்து இருவரும் சாகும் அபாயம் ஏற்படுகிறது. அப்போது தலைவர் "எக்ஸ்" திடீர் என்று தோன்றி இருவரையும் காப்பாற்றுகிறார். இந்தக் கட்டமே எனக்குப் பிடித்த சம்பவம் ஆகும்.

பயங்கரவாதிகளைப் பிடிக்க டைகரும், ஹென்றியும் பல கஷ்டங்களை அனுபவிக்கிறார்கள். என்றாலும் அவர்கள் உயிருக்கு ஆபத்து நேருகிற போது தலைவர் "எக்ஸ்" செய்கிற அந்த உதவி மிகப்பெரிய உதவியாக மாறிவிடுகிறது.

காலத்தினாற் செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது!

—என்ற வான்புகழ் வள்ளுவரின் வாக்கு இங்கே நிறைவேறுகிறது.

அதிகாரத் தோரணையில் மிஸ்டர் எக்ஸ் உல்லாசமாக இருக்க வில்லை. தன் கீழ் பணியாற்றும் 2 கடமை வீரர்களை கண்காணித்துக் கொண்டு இருக்கிறார். அவர்களுக்கு ஆபத்து என்றதும், ஓடிப் போய் காப்பாற்றுகிறார். ஒரு நல்ல தலைவருக்கு, மேல் அதிகாரிக்கு இந்த கட்டம் நல்ல எடுத்துக்காட்டாய் இருந்தது. நாட்டைக் காக்கும் பெரும் பணிக்கும், அது வழி வகுத்தது."

ராணி காமிக்ஸ் — 39
(மாதம் இருமுறை இதழ்)

பிப்ரவரி 1 — 14
1986

# 007 ஜேம்ஸ் பாண்ட் துப்பறியும், கடல் பூதம்!



எண்ணைக் கம்பெனி தலைவர் மிஸ்டர் மோர்லாக்



இன்னொரு அதிபர் மிஸ்டர் மேக்



3 — வது அதிபர் மிஸ்டர் லிசார்ட்

"சர்வ சக்தி" இயக்கத் தலைவி மிஸ் மேக்டா மதெர்.



மிஸ்டர் லிசார்ட் காரியதரிசி ரோச்சி



மிஸ்டர் லிசார்ட் மகள் மிஸ் ஏஞ்சல்



மோர்லாக் என்ற கோடீஸ்வரர், தன் இளம் மனைவியுடன், ஒரு இயந்திரப் படகில், அமெரிக்காவில் மியாமி கடலில் மீன் பிடித்துக் கொண்டு இருந்தார். அப்போது...

அதோ, வானில் பாருங்க!

அங்கே ரகசிய உளவாளி 007 ஜேம்ஸ்பாண்ட் ஒரு "மினி" ஹெலிகாப்டரில் வந்துகொண்டு இருந்தார்.

உடனடியா நீங்க மியாமி நகருக்கு திரும்புங்க. உங்களை யாரோ ஒருவர் இன்று கடலில் கொல்லப்போவதா தகவல்!

நீங்க இங்கிலாந்து உளவுத்துறையை சேர்ந்தவரா? பெயர் ஜேம்ஸ்பாண்டா? வெரிகுட்! உங்களுக்கு என்ன வேணும்?

ஆனால் கோடீஸ்வரர் மறுத்தார்.

கரை திரும்புவதா? முடியாது. எனக்கு எதிரிகள் யாரும் இல்லை.

அதனால் பயப்பட தேவை இல்லை.

கரைக்கு திரும்ப என் மனைவியும் விரும்பமாட்டாள். இதோ தூண்டிலில் ஒரு பெரிய மீன் சிக்கி இருக்கு!


அப்படியானால் உங்க விருப்பம். நான் மியாமி நகருக்குப் போகிறேன்!
ஒரு பெரிய மீன் சிக்கி இருக்கு. அதை பார்த்து, என்னை பாராட்டி விட்டு போங்க மிஸ்டர் ஜேம்ஸ்பாண்ட்!


சார்! இதென்ன?


தூண்டிலில் சிக்கி இருந்தது ஒரு பெண்!
இவள் உயிரோடு இருக்கிறாளா?


அப்படித்தான் தெரியுது!
இப்படி நடுக்கடலில் இவள் என்ன செய்கிறாள்?


இவளுக்கு மூச்சு வந்ததும் அதுபற்றி விசாரணை செய்வோம்!


அவள் எழுந்து உட்கார்ந்தாள்.
தேங்ஸ்!
பெண்ணே! என் தூண்டிலில் சிக்கும் முன் நீ இங்கே என்ன செய்தாய்?


அதை நீங்க தெரிந்துகொள்ள அவசியம் இல்லை.


அதிர்ச்சி அடைந்த கோடீஸ்வரர்—
பெண்ணே! சொன்னால் கேள். இனி நீ தண்ணீரில் மூழ்கினால் ஆபத்து!
யாருக்கு ஆபத்து?


ஏய்! நில்!


கோடீஸ்வரரின் மனைவி ஜேம்ஸ்சை தடுத்தாள்.
நோ! மிஸ்டர் பாண்ட்! அவளைப் பற்றி நமக்கு என்ன?


அதோ அவள் கடலில் குதிக்கிறாள்!


மிஸ்டர் பாண்ட்! நீங்க என்ன செய்றீங்க?
அவளை பிடிக்க வேண்டும்! நானும் குதிக்கிறேன்!


அவள் மீது எனக்கு சந்தேகம்!


அடுத்த நிமிடத்தில் அந்த இயந்திரப் படகு வெடித்து சிதறியது!


அமெரிக்க ஆஸ்பத்திரியில் ஜேம்சை இங்கிலாந்து உளவுத்துறை தலைவர் மிஸ்டர் "எம்", அவர் அந்தரங்க செயலாளர் கிரேசி ஆகியோர் பார்த்தனர்.
படகு வெடித்த- சத்தத்தை- கேட்டு அமெரிக்க கடற்படை உன்னை காப்பாற்றி இருக்காங்க!
இப்போ உடம்புக்கு சரியா போச்சு!


கோடீஸ்வரர், மனைவியுடன் இறந்து விட்டார்.
நான் கடலில் குதித்ததும் படகு வெடித்து இருக்கு.


கோடீஸ்வரர் மோர் லாக், தூண்டிலில் ஒரு மர்ம பெண் சிக்கினாள். அவள் தான், படகுக்கு "டைம்-பாம்" வைத்திருக்க வேண்டும்!
அவள் என்ன ஆனாள்?
அவள் கடலில் குதித்தாள். அவளை பிடிக்க நான் குதித்தேன்.
நீங்க குதித்த அடுத்த நிமிடம் படகு வெடிச்சு இருக்கு!


அவ தன்னை யார்ன்னு சொல்ல மறுத்துவிட்டாள். அவசரமா கடலில் குதிச்சதை, பார்க்கும் —போது படகு அடிப்பாகத்தில் அவள் தான் வெடிகுண்டை வைத்து இருக்கணும்.
பிறகு தற்செயலா மோர்லாக் தூண்டிலில் சிக்கி இருக்கணும்!


ஜேம்ஸ், நீங்க லண்டன் திரும்ப ஏற்பாடு செய்துவிட்டோம். நாங்க முதல்ல புறப்படுறோம்!
தூங்கறதுக்கு திரும்பவும் மயக்க ஊசியா?
உங்களுக்கு காய்ச்சல் கொஞ்சம் அதிகரிச்சு இருக்கு. அதனால்...


பிறகு...


அந்த நீக்ரோ முரடன் ஒரு கையில் கத்தி,
இன்னொரு கையில் துப்பாக்கியுடன்,
ஜேம்ஸ்பாண்டை நோக்கி வந்தான்.


அரைகுறை தூக்கத்தில்
இருந்த ஜேம்ஸ், சுவரில்
அவன் நிழலைப் பார்த்து
விட்டார்!




கறுப்பு முரடனின் கத்திக் குத்தை, ரப்பர்
தலையணையில் ஏந்திய ஜேம்ஸ், அவன் கையை
முறுக்கி, அவனை படுக்கைக்கு மேல்
அலாக்காக தூக்கி கீழே விழ வைத்தார்.


பிறகு அவன்
பிடறியில் ஓங்கி
அறைந்தார்.


இந்தா
வாங்கிக்கோ!


நர்ஸ் ஓடிவந்து—
மிஸ்டர்
பாண்ட்!
இங்கே என்ன
நடக்குது?
இந்த ஆள்
தவறி விழுந்து
மயக்கம்
போட்டுட்டான்.
கையில ஆயுதம்
வைத்து
இருக்கான்.
ஒண்ணும்
புரியல்லே!


ஜேம்ஸ்
புறப்பட
தயார்
ஆனார்.
மிஸ்டர்
பாண்ட்! ஏன்
அவசரமா
புறப்படுறீங்க?
என்
வீட்டுக்கு
வாங்க!


வீட்டு
விலாசத்தை
எழுதி கொடு.


அன்று மாலை ஜேம்ஸ் அவள்
வீட்டுக்கு சென்றார்.
ஜேம்ஸ்!
இவ்வளவு
சீக்கிரமா
வருவீர்கள்
என்று நான்
எதிர்பார்க்க
வில்லை.
உன்னைச்
சந்தித்து சில
கேள்விகளை
கேட்க
நினைத்தேன்.


என்ன
கேள்விகள்?
என்னைக்
கொல்ல
வந்தவனுக்கு
என் ரூம் நம்பர்,
நீ மயக்க மருந்து
கொடுத்தது எல்லாம்
எப்படி தெரியும்?


நான் அவனுக்கு உதவி செய்தேன் என்று சந்தேகமா?
சந்தேகப்-படும்படி சூழ்நிலை அமைந்து விட்டது.


அதனால் நீ வரும் முன்பே இங்கே வந்து உன் வீட்டை சோதனை போட்டேன்!
அது அத்து மீறிய செயல்!


இருக்கலாம். ஆனால் ஒரு சுவையான பொருள், இங்கே சோதனையில் சிக்கியது!


இந்த கர்ப்பிணி பெண் பொம்மைக்கு என்ன அர்த்தம்?
இது ஆப்பிரிக்க பெண்-காதல் —தெய்வம். இதை எல்லா நீக்ரோ பெண்களும் வைத்திருப்பாங்க!


இந்த மாதிரி வீண் பேச்சுக்கு இனி நேரம் இல்லை!


அவசரப்படாதே! என் கைகளில் என்ன இருக்கு பார்!
உம்! கைகளை மேலே தூக்கும்!






திடீர் என்று அவள் சுட்டதும் ஜேம்ஸ் விலகிக்கொண்டு தப்பித்தார். பிறகு மீண்டும் சுட்டாள். அதில் இருந்தும் தப்பி பாட்டிலால் தாக்கினார்.










007 லண்டன் திரும்பினார். உளவுத்துறை அதிகாரி வில்லியம் விமான நிலையம் வந்து இருந்தார்.




உன்னைக் கொல்ல முயன்ற அந்த நீக்ரோ அழகி பற்றி, அங்குள்ள போலீசார் அறிக்கை அனுப்பி இருக்காங்க! ஆஸ்பத்திரியில் உன்னைக் கொல்ல முயன்ற நீக்ரோவுக்கும் அவளுக்கும் தொடர்பு இருக்கு.


ஜேம்ஸ், வில்லியம் இருவரும் ஆபீஸ் திரும்பியதும்—
மோர்வாக், தூண்டிலில் ஒரு பெண் சிக்கினாள் இல்லையா?
இந்த பொம்மை, அந்த நீக்ரோ அழகி வீட்டில் மறைத்து வைக்கப்பட்டு இருந்ததா?


அவள் தொடையில் இதே மாதிரி ஒரு உருவம் பச்சை குத்தப்பட்டு இருந்ததை கவனித்தேன்.


இதே மாதிரி ஒரு உருவத்தை சமீபத்தில் நான் பத்திரிகைகளில் பார்த்தேன்.
நானும் பார்த்தேன்.


இதோ இன்றைய காலை பேப்பரில்..
இரண்டு உருவமும் ஒன்று போல் இருக்கு!


ரோமானிய காலத்துக்கு முற்பட்ட கர்ப்பிணி தெய்வ வெண்கல சிலை. ஹாட்பி என்ற இடத்தில் உள்ள பழங்கால பொருள் விற்பனை நிலையத்தில் 25 ஆயிரம் பவுண்டுக்கு விற்கப்பட்டது.


007 அங்கே போனார்.
எஸ்! இதை கர்ப்பிணி பெண் தெய்வம் என்போம்.
அதுபற்றி முழு விவரம் அறிந்துகொள்ளவே இங்கே வந்தேன். சொல்ல முடியுமா?
பூமியை தாயாக, அல்லது பெண் தெய்வமாக வழிபடும் இயக்கத்தின் வழிபாட்டு சிலை வடிவமும் இதுதான்.
எதனால் இது, மிக அதிக விலைக்கு விற்கப்படுகிறது?


அதற்கு நிறைய கிராக்கி இருக்கு.
அந்த மாதிரி பழங்கால சிலை கிடைத்தால் "சர்வ சக்தி" என்ற இயக்கத்தினர் என்ன விலை கொடுத்தும் வாங்கி விடுகின்றனர்!
ஜேம்ஸ்பாண்ட் உளவுதுறை திரும்பியதும்—
கிரேசி! "சர்வ சக்தி" என்ற இயக்கத்தினர், பழங்கால கர்ப்பிணி தேவதை சிலைகளை என்ன விலை கொடுத்தும் வாங்குகிறார்களாம். அவர்களைப் பற்றி உனக்குத் தெரியுமா?
தெரியும். சொல்கிறேன்.


"சர்வ சக்தி" என்ற இயக்கத்தினர் பெண்கள் உரிமைக்காகப் போராடு-பவர்கள். அதற்காக நிதியை திரட்ட ஆண்களை எதிர்பாராமல், அவர்களே பல கம்பெனிகளை நடத்துகிறார்கள்!


இங்கே இருந்து பார்த்தால் அவர்கள் தலைமை நிலையம் தெரியும்.
அதோ தூண் போன்ற அந்த பல மாடி கட்டிடம் தானே!


ஜேம்ஸ்பாண்டிடம் ஹெலிகாப்டர் நிபுணர் கூறினார்—
ஜேம்ஸ்! இந்த விசையை அழுத்தினால், எண்ணை கசிந்து, கரும் புகை வெளி வரும்.
ஹெலிகாப்டர் ரிப்பேர் போல் காட்ட இதைச் செய்யலாம்!


ஜேம்ஸ்! சிகரெட்டு லைட்டர் போல் இருக்கும் இது கேமரா கருவி. பக்கவாட்டில் உள்ள பொத்தானை அழுத்தினால் படம் எடுக்கும்!


அன்று இரவு—
“சர்வ சக்தி” பெண்கள் உரிமை இயக்கத் தலைவி இந்த கட்டிடத்தில்தான் வசிக்கிறாள்!


ஹெலிகாப்டர் ரிப்பேர் ஆகிவிட்டதால், அந்த கட்டிடத்தில் இறங்கியதாக கூற, 007 கரும் புகையை கக்க விட்டார்!
இருட்டா, அமைதியா இருக்கு!


விமானத்தை ரிப்பேர் செய்ய மெக்கானிக் தேவை. அதற்கு போன் செய்வது போல் நோட்டம் பார்க்கிறேன்!


காவலுக்கு ஒரு எமகாத நாயை போட்டு இருக்காங்க!

படிகளில் மேலே ஏறிக்கொண்ட 007—

என் கையில் பெரிய ஸ்பேனர் இருக்கு!

அதை வைத்து உன் மண்டையை உடைப்பேன்!







மேடம்! திடீர் என்று விமானத்தில் எண்ணை கசிய ஆரம்பித்தது. வேறு வழி இல்லாமல் இங்கே இறங்கினேன்.
அது உண்மையா பார்க்கலாம்!


உங்களால் உதவ முடியுமா?
முடியுமே!
நம்ம மெக்கானிக்கை அனுப்பு. ஒரு விமானத்தை சரி பார்க்கணும்!


விமானத்தை இவள் சரி பார்ப்பாள்!
அதுவரை நாம் கீழே போய் பேசிக் கொண்டு இருப்போம்!


கீழே போனதும்—
இந்த மாதிரி கர்ப்பிணி பெண் சிலைகளை உங்களுக்கு பிடிக்கும் போலிருக்கு. ஆனா இது நல்லா இல்லையே!


ஆண்களுக்கு நல்லா இராது! பெண்மையின் தனித் தன்மையை இது காட்டுகிறது. படைக்கும் சக்தி உடையவள் பெண் என்பதை இது உணர்த்தும்.
மேடம்! இங்கே தண்ணீரில் மிதக்கும் இது என்ன?


இது கடல் பூதம். ஒரு பெரிய எண்ணைக் கம்பெனியை வாங்கி, அதன் சின்னமாக இதை வைக்க இருக்கிறோம்!


அந்த இரவு நேரத்திலும் அவள் குளிக்க தயார் ஆனாள்.
மிஸ்! தண்ணீர் குளிராதா?
இது எப்போதும் இதமான சூட்டில் இருக்கும்.


வென்னீர் குளியல் உடலுக்கு சுறுசுறுப்பை கொடுக்கும். மிஸ்! உங்க பெயர் என்ன?
மிஸ். மேக்டா மதெர். "சர்வ சக்தி" என்ற இயக்கத்தை கேள்விப் பட்டு இருக்கீங்களா? அதன் தலைவி நான்தான்!


அருகில் இருந்த அறையில் ஜேம்ஸ் ஆடை அணியும் போது, கதவை யாரோ தட்டி-னார்கள்.
யார் அது? உள்ளே வாங்க!


ஓ! சாரி! நான் மிஸ் மேக்டாவை தேடி வந்தேன்.


உங்களை... எங்கோ பார்த்த நினைவு இருக்கே! நினைவு வருது. கோடீஸ்வரர் மோர்லாக் படகில்...


அதிர்ச்சி அடைந்த அவள் ஓடினாள்!
என்ன சொல்றீங்க? எனக்கு ஒண்ணும் புரியவில்லை!
மோர்லாக் என்ற ஆளை உனக்கு தெரியாது என்றால் நான் நன்றாக நினைவுபடுத்துகிறேன்! போகாதே! நில்!


என்னை போக விடு! இல்லை...
கோடீஸ்வரர் படகுக்கு வெடி வைத்து அவரை கொலை செய்தது நீதானே, உண்மையை சொல்!


கத்தியை கீழே போடு! உம்!


மிஸ் மேக்டா ஆடை அணிந்துகொண்டு இங்கே வருவதற்குள் இவளை மறைத்து வைக்கணும். உம், அந்த திரைச்சீலைக்கு பின்னால் இவளை போடுகிறேன்.


மிஸ் மேக்டா அங்கே வர—
இன்னும் டிரஸ் பண்ணலியா?
போன் செய்து வேறு மெக்கானிக்கை இங்கே வர சொல்லட்டுமா? மிஸ் மேக்டா?


வேண்டாம்! அவள் உங்க விமானத்தை சரி செய்து விட்டாள்!


பிறகு இருவரும் மேலே வந்தனர்.
எண்ணெ கசிவை நிறுத்தி விட்டாயா?
ஆமா சார்! என்ஜினை ஸ்டார்ட் செய்து, மேலே கிளம்பி போய் பாருங்க!


மிஸ் மேக்டா! உங்க உதவிக்கு நன்றி!
பெண்களை நம்பிதான் ஆண்கள் இருக்கணும் என்பதற்கு இந்த உதவி ஒரு உதாரணமா இருக்கட்டும்!


ஏய்! எப்படி செய்தாய்?
சரியாக 5 நிமிடத்தில் விமானம் வெடித்து சிதறும்படி குண்டை பொறுத்தி உள்ளேன்!


ஜேம்ஸ் உடனடியாக விமான நிபுணருடன் ரேடியோ கருவி மூலம் பேசினர்.
கரும் புகையை கக்கும்படி செய்வது ஒரு ஏமாற்று வேலை தானே! பின்னே எப்படி அந்த பெண் சரி செய்தாள்?


பெண் சரி செய்தாளா? ரிப்பேர் இருந்தால் தானே சரி செய்ய முடியும்? ஜேம்ஸ் என்ன சொல்றே?
சார்! உண்மையான எண்ணைக் கசிவை சரி செய்வது போல் ஒரு பெண் மெக்கானிக் சரி செய்தாளே!


ரிப்பேர் இல்லாதபோது எப்படி சரி செய்ய முடியும், ஜேம்ஸ்?
அதுதானே சார் நானும் கேட்கிறேன்.


ஜேம்ஸ்! ஒரு விசையை அழுத்தினால் கரும் புகை வரும். அது ரிப்பேர் இல்லே.
அந்த பெண் ரிப்பேரை சரி செய்துவிட்டதாக கூறினளே!


அப்படியானால்,
உன்னை அடையாளம் கண்டுகொண்டு, உன்னை தீர்த்துகட்ட ஏதோ சதி செய்திருக்காள்.
அப்படியா! உடனடியா குதிக்கிறேன். கீழே தேம்ஸ் நதி ஓடுது. அது காப்பாற்றும்!


டமார்!
ஒரு விநாடி தாமதித்தாலும் செத்து இருப்பேன்!


வானில் ஒரு ஹெலிகாப்டர் வெடிப்பதை அறிந்த போலீஸ் ரோந்து படகு, ஜேம்ஸ்பாண்டை காப்பாற்றியது.
பயங்கர—வாதிகள் நாச வேலையா?


இது ஒருவகை நாசவேலை. நான் ராணுவ இலாகா உளவுத் துறையை சேர்ந்த உளவாளி!
எங்களுக்கு அப்படித்தான் தகவல் வந்தது. ரேடியோ கருவியில் சொன்னாங்க.


மறுநாள் உளவுத்துறையில்—
ஜேம்ஸ்! நீ சிகரெட்டு லைட்டர் கேமராவில் எடுத்த படங்கள் எல்லாம் நல்லா வந்திருக்கு!
இவள்தான் சர்வ சக்தி இயக்க தலைவி. மிஸ் மேக்டா மதெர்.


உளவுத்துறை அதிகாரி மிஸ்டர் வில்லியம் கூறினர்—
அந்த மேக்டா அமெரிக்க பெண்!
இவளுக்கும், காட்டன் மதெர் என்ற மத தலைவிக்கும் தொடர்பு இருக்குமா?


மதம்,
மாந்திரீகம் என்று
காட்டன் மதெர்
பெயர் வாங்கி
வருகிறார்!


ஆனால்
இந்த மேக்டா,
விஞ்ஞான அறிவு
மிகுந்தவள்.
தொழில்
நுட்ப திறனும்,
தொழில்களை
நிர்வகிக்கும்
ஆற்றலும்
மிக்கவள்.


அவள் பெரிய
தொழில் அதிபர்.
அவளது தனிப்பட்ட
சின்னம் இந்த கர்ப்பிணி
பெண் தெய்வம். அவளுடன்
தொடர்பு உள்ள
பெண்களும் இந்த
சின்னத்தை வைத்துக்
கொள்கிறார்கள்.
அது
சரிதான்.


அவள்
அமெரிக்காவைச்
சேர்ந்தவள். இங்கே
"சர்வ சக்தி" இயக்க
தலைவியாக இருக்கிறாள்.
அதுபோக இங்கு
வேறு என்ன
செய்கிறாள்?
மிஸ்டர் மேக்
என்பவருடன் அவரது
"வட கடல் எண்ணெக்-
-கம்பெனி" பற்றி பேச்சு
நடத்திக்கொண்டு
இருக்கிறாள்.

அந்த நேரத்தில் எண்ணை அதிபர் மிஸ்டர் மேக், நடுக்கடலில் எண்ணை எடுக்கும் நிலையத்துக்கு போய்விட்டு, தனது கப்பலில் கரை திரும்பிக்கொண்டு இருந்தார். அப்போது—

சார்! உங்களுக்கு லண்டனில் இருந்து டெலிபோன் கால். மிஸ் மேக்டா என்ற பெண் அவசரமா பேச வேண்டும் என்கிறார்.

அதற்கு எண்ணை அதிபர் மேக்—

அவளுக்கு ஏற்கனவே என் பதிலை சொல்லிவிட்டேன். என் நிலையில் மாற்றம் இல்லை. வீணாக போனில் தொந்தரவு செய்ய வேண்டாம் என்று சொல்!

சரி சார்!

கொஞ்ச நேரம் கழித்து—

பாஸ்! அதோ பாருங்க! அது என்ன?

திடீர் என்று பயங்கர உருவம் தோன்றியது.

இது என்ன? கடல் பூதமா?

பறக்கும் கடல் நாகம், கடல் பூதம் பற்றி சின்ன வயதில் படித்து இருக்கிறேன். அது இதுதானா? நாம் பார்ப்பது உண்மையா?

சார் உள்ளே போங்க! அது மனிதனை விழுங்கும் பூதமா இருக்கும்!

ஆனால் அடுத்த விநாடி—

அடக் கடவுளே!


உடனடியாக அந்த திடுக்கிடும் சம்பவம் பற்றி லண்டனுக்கு செய்தி அனுப்பப் பட்டது. உளவுத் துறைக்கும் செய்தி வந்தது.
மிஸ்டர் "மேக்"கா?


எண்ணெ அதிபர் மிஸ்டர் "மேக்"கை சந்தித்து பேசவே குமாரி மேக்டா லண்டன் வந்து இருக்கிறாள் இல்லையா?


ஆமா! எண்ணெக் கிணற்றில் இருந்து அவர் கரை திரும்பும் வழியில் அவரை கடல் பூதம் விழுங்கி இருக்கு!
கிளிக்


கடல் பூதமா? மிஸ்டர் மேக்கை உயிரோடு விழுங்கி விட்டதா?
ஆமா! கப்பல் ஊழியர்கள் கண்ணால் பார்த்து உள்ளனர்!


ஜேம்ஸ்! என்னால் அந்த செய்தியை நம்பவும் முடியவில்லை, நம்பாமலும் இருக்க முடியவில்லை. கப்பல் கேப்டன் பெயர் கார்ல்சன். அவரை சந்தித்து பேசு!
வில்லியம் சார்! நமது ஹெலிகாப்டரில் போகிறேன்! விழுங்கிய ஜந்து எது என்று கண்டுபிடிக்கணும்!

ஜேம்ஸ்பாண்ட், விமானத்தில் போனார்.

கேப்டன் கார்ல்சன்?

ஆமா! நீங்க ராணுவ இலாகா ஒற்றர் ஜேம்ஸ்பாண்ட் தானே!







கேப்டன் அறையில் போய் பேசினார்.

அந்த கடல் பூதத்துக்கு பெரிய உடம்பு இருந்தது இல்லையா?

ஆமா! ஆரம்பத்தில் பெரிதாகவும் போகப் போக சிறிதாகவும் இருந்தது.

அதை கடல் நாகம் அல்லது கடல் பூதம் என்று சொல்வது பொருத்தமே!

அது இதைப் போல் இருந்ததா?


ஆமா! இதே மாதிரி தான் இருந்தது!


அது இதே மாதிரி இருந்தது என்று எப்படி சரியாக வரைந்தீர்கள்?
இதே போல் ஒன்றை நான் பார்த்து உள்ளேன்!


ஆனல் கடலில் அல்ல. ஒரு பெண்ணின் நீச்சல் குளத்தில்!


ஜேம்ஸ் கரை திரும்பியதும்—
ஜேம்ஸ்! அதே மாதிரி கடல் பூத பொம்மையை மிஸ் மேக்டா நீச்சல் குளத்தில் பார்த்து இருக்கிறயா?


அந்த பொம்மையும், மிஸ்டர் "மேக்"கை விழுங்கிய ஜந்துவும் ஒன்று போல் இருந்து இருக்கு. இல்லையா?
மிஸ்டர் "மேக் மரணத்துடன் மிஸ் மேக்டாவை தொர்புபடுத்த இது தவிர இன்னெரு துப்பும் உள்ளது.


என்ன அது?
மிஸ் மேக்டாவுடன் ரேடியோ–டெலிபோனில் மிஸ்டர் மேக் பேச மறுத்த கொஞ்ச நேரத்தில் கடல் பூதம் தோன்றி விழுங்கி இருக்கு!


மிஸ் மேக்டா எது பற்றி பேச விரும்பி-ருளாம்?
ஏதோ தொழில் சம்பந்தமா பேச விரும்பியதா கப்பல் ரேடியோ ஆபீசர் கூறினர்.


மிஸ் மேக்டா ஏதோ தொழில் ஒப்பந்தம் பற்றி கேட்டதற்கு மிஸ்டர் மேக் திட்டவட்டமா மறுத்து இருக்கார்.
தொழில் ஒப்பந்தமா? என்ன அது?


நிச்சயமாக அது, மிஸ்டர் மேக்கின் வட கடல் எண்ணெ கம்பெனி பற்றிதான் இருக்கும்!
அதுபற்றி விசாரித்து விடுகிறேன்.


மிஸ்டர் வில்லியம் எங்கோ போன் செய்தார். பிறகு—
மேக்கின் எண்ணெ கம்பெனியை வாங்க மிஸ் மேக்டா முயன்றதாக, மேக்கின் ஆபீசில் சொல்கிருர்கள்.


கோடீஸ்வரர் மோர்லாக்கை ஒரு பெண் படகில் வெடிகுண்டு வைத்து கொன்ருள் என்று சொன்னேன். நினைவு இருக்கா?


அந்தப் பெண்ணை மீண்டும், மிஸ் மேக்டா டவர் கட்டடத்தில் பார்த்தேன். எனவே அவள் மேக்டாவின் ஆள்!


உளவுத்துறையினர், மிஸ்டர் மேக்கின் ஆடிட்டரை சந்தித்தனர்.
மிஸ்டர் வென்டர்! வட கடல் எண்ணெ கம்பெனியின் அமைப்பு பற்றி சொல்லுங்க.
மிஸ்டர் எம்! அந்த கம்பெனியில் மூன்று கோடீஸ்வரர்கள் முதலீடு செய்து இருந்தனர்.


அதன் தலைவர் மோர்லாக். மற்ற இருவரும் மிஸ்டர் மேக், பிரான்சு தொழில் அதிபர் விசார்டு.


அந்த மூவரில், இருவர் இறந்து விட்டனர்.


மீண்டும் உளவுத் துறையில் விவாதம் நீடித்தது.
அவரது கூட்டாளிகள் திட்டமிட்டு கொல்லப்பட்டது உண்மை என்றால், அடுத்த பலி அவர்தான்.
மிஸ்டர் வில்லியம்! விசார்டு பற்றி உடனடியா விசாரிக்கணும்.
எனவே விசார்டை உடனடியா விசாரிக்க வேண்டும்.

பாரீசில் உள்ள விசார்ட் ஆபீஸ்.

மிஸ்டர் விசார்ட் சார்! "சர்வ சக்தி" இயக்கத்தில் இருந்து உங்களுக்கு போன்!

அந்த இயக்க தலைவி மிஸ் மேக்டா அமெரிக்காவில் இருந்து லண்டன் வந்து இருக்கிறாள். என்னை நேரில் சந்திக்க வேணும் என்கிறாள்.

போனில் மிஸ் மேக்டா தான் பேசினாள்.

மிஸ்டர் விசார்ட்! உங்களது ரெண்டாவது கூட்டாளி சமீபத்தில் இறந்ததற்கு எனது ஆழ்ந்த அனுதாபத்தை தெரிவிக்கவே இப்போது போன் செய்தேன்!

அது சரி, மிஸ் மேக்டா!

எனது கூட்டாளிகள் ரெண்டு பேர் இறந்துவிட்டதால், எங்களது வட கடல் எண்ணெய்க் கம்பெனிக்கு பண நெருக்கடி ஏற்படும், அதனால் உங்களுக்கு விற்று விடுவேன் என்று கனவில் கூட நினைக்க வேண்டாம்!

என்னை கூப்பிட்டீர்களா மிஸ் மேக்டா?

ஆமா! அந்த பிரான்சு ஆள் சரிபட்டு வரவில்லை அவரை சந்தி!

ஜேம்ஸ்பாண்ட் பிரான்ஸ் புறப்பட்டார்.

குமாரி மேக்டாவின் அடுத்த பலி விசார்ட் என்று நம்புகிறீர்களா ஜேம்ஸ்?

அவர் பங்குகளை மேக்டா வாங்க நினைத்தால், அதுதான் நிலை. எல்லாம் பிரான்ஸ் போனால் தெரியும்.


007 போவதற்கு முன், மிஸ் மேக்டாவின் ஆள், பாரீஸ் அருகே உள்ள ஓர்லி விமான நிலையம் போய், மிஸ்டர் லிசார்ட்டுக்கு போன் செய்தாள்.
என்னிடம் ஒரு முக்கிய தகவலை விற்க விரும்புகிறாயா? என்ன அது?
லிசார்ட் கேட்டார்—


சர்வ சக்தி என்ற பெண்கள் இயக்கத்தை பற்றி...
இன்று இரவு நான் நடத்தும் முகமூடி விருந்துக்கு வந்தால் தனிப்பட்ட முறையில் பேசலாம்!


கொஞ்ச நேரத்தில் அந்தப் பெண் லிசார்ட் மாளிகைக்கு வந்தாள்.
மிஸ்டர் லிசார்ட் என்னை விருந்துக்கு வரச் சொல்லி இருக்கார். "அவள்" வந்து இருப்பதாக சொல்லுங்க.


"அவள்" என்று சொன்னால் அவருக்கு புரியும்.


சார்! "அவள்" வந்து இருக்காள்.
மேலே டவரில் உள்ள என் ஆபீஸ் அறைக்கு அவளை அழைத்துச் செல்!


அதன்படி "அவள்" அழைத்துச் செல்லப்பட்டாள்.
இங்கே இருங்க பாஸ் வருவார்!


மிஸ்டர் லிசார்ட்! நான் தான் உங்களுடன் போனில் பேசியவள்!
சர்வ சக்தி இயக்கம் பற்றி என்னிடம் நீ சொல்ல இருந்த தகவல் என்ன, மிஸ்?


சர்வ சக்தி இயக்க தலைவி மிஸ் மேக்டா பேச்சை நீர் கேட்க மறுத்துவிட்டீர்!


அப்போது 007, அந்த மாளிகைக்கு வந்து—
சாரி மிஸ்டர்! முகமூடி விருந்து நடக்க இருக்கு. அழைப்பு உள்ள—வர்கள் மட்டும் அனுமதிக்க எனக்கு உத்தரவு!


ஆனால், நான் அவசரமா லிசார்டை சந்திக்க வேண்டுமே!
நான் அவர் செயலாளர் ரோச்சி. இப்போ நீங்க அவரைப் பார்க்க முடியாது.


அப்போது மேலே—


துப்பாக்கி சத்தம் கிழே கேட்டது.
துப்பாக்கி வெடிக்கும் சத்தம்! அது மேலே ஆபீசில் இருந்து கேட்டதே!
உங்க பாஸ், மேலேயா இருக்கார்?


ஆமா,
ஒரு இளம் பெண்ணுடன்!
உடனடியா அங்கே என்னை அழைத்துப் போங்க. கூட்டது யாராக இருந்தாலும் இப்போ அங்கேதான் இருக்க வேண்டும்!


மேலே—
மிஸ் மேக்டா பேச்சை கேட்கா விட்டால் இதுதான் கதி. உங்க கூட்டாளிகள் போன இடம் போங்க!


மேலே, டவர் ஆபிசுக்கு போக வர இது ஒன்றுதானா வழி?
ஆமா, சார்!


கோபுரத்தின் மேலே ஜன்னல்கள் உள்ளன!


அடுத்த விநாடி—


மேலே போனதும்—
கதவு பூட்டி இருக்கே!


கதவை உடைத்து உள்ளே போவோம்!




உள்ளே ஆபீசில்—
ஜன்னல் வழியாக தப்பி விட்டாள்.
அவள் பாசை கொன்று விட்டாள்.


அவள் பறந்து போனாள்!


ஸ்கர்ட்-பாராசூட் மூலம் அவள் பறந்து தப்பி விட்டாள்!


அருகில் இருந்த கால்வாயில் அவள் இறங்கினாள்.


அங்கே ஒரு இயந்திர படகு தயாராக இருந்தது.


அவளை எப்படியும் பிடிக்கணும், வா!


இருவரும் கீழே வந்ததும்—
ஒரு மோட்டார் படகு போகும் சத்தம் கேட்குது.
அவள் தப்பியே விட்டாள்.


என்றாலும் ஜேம்ஸ் ஓடிப் போய் சுட்டுப் பார்த்தார்.


அவள் யார் என்று தெரியுமா?
மற்ற விருந்தினர் மாதிரி அவளும் முகமூடி அணிந்து வந்தாள். அந்த ரகசிய விருந்தாளியை எதிர் பார்த்து இருப்பதாக பாஸ் கூறினார். எனக்கு வேறு எதுவும் தெரியாது!


மறுநாள், கோடீஸ்வரரும், தொழில் அதிபருமான லிசார்ட் உடல் அடக்கம் நடந்தது. அவரது ஒரே மகள் ஏஞ்சல் சோகமே உருவாக காணப்பட்டாள்.


அப்பாவுக்கு இறுதி சடங்கு நடத்திய உங்களுக்கு நன்றி!
மிஸ் ஏஞ்சல், எனது இதய அஞ்சலி உரித்தாகுக. உனது துக்கத்துக்கு அளவே இல்லை. கர்த்தர் உன்னை ஆசீர்வதிப்பார்.


மிஸ் ஏஞ்சல்! உன்னிடம் ஒரு ஆள் அவசரமாக, ரகசியமா பேச விரும்புகிறார்.


என்னிடம் தனியாக பேச விரும்பும் அவர் யார் பாதர்?
அவர் இங்கிலாந்து நாட்டுகாரர். என்னுடன் வா. அவரிடம் கூட்டி செல்கிறேன்!


மிஸ் ஏஞ்சல்! நான் உங்களுக்கு பாதுகாப்பா வரவா?
வேண்டாம் காரியதரிசி! நான் பாதருடன் சர்ச்சுக்கு போய்விட்டு வருகிறேன்.


அங்கே கார் டிரைவராக 007.
இவர் தான் அவர், மிஸ் ஏஞ்சல்!
காரில் ஏறுங்க மிஸ்!


மிஸ் ஏஞ்சலும், ஜேம்ஸ்பாண்டும் காரில் ஏறினார்கள்.
நீங்க யார்? என்னிடம் என்ன சொல்ல வேண்டும்?
என் பெயர் ஜேம்ஸ்பாண்ட். நான் இங்கிலாந்து ஒற்றர்!


உங்க அப்பாவை கொன்ற நபர், அல்லது ஸ்தாபனம், உங்களையும் கொல்லலாம் என நாங்க சந்தேகப் படுகிறோம்!


நீங்க ஏன் டிரைவர் மாதிரி வேஷம் போடணும்?
இதன் மூலம்தான் உங்க தகப்பனாரின் காரியதரிசி பிடியில் இருந்து உங்களை தப்புவிக்க முடிந்தது.


எங்க காரியதரிசி ரோச்சி என்னை பார்க்கவிடாமல் உங்களைத் தடுத்தாரா?


அது மட்டும் அல்ல. நாம் பேசவிடாமல் தடுக்க அவர் முனைவார்!


நம் பின்னால் வருவது அவர் கார்தானே!


நாம் பேசுவதை அவர் ஏன் தடுக்க வேண்டும்? அவர் என் தந்தையின் நம்பிக்கைக்கு பாத்திரமானவர்!


அந்தக் காரை எப்படியாவது நிறுத்து!
இருக்கலாம். இப்போ அவர் எதிரிகளின் கையாள்!


காரை நிறுத்த இதுவே வழி!


கார் டயரில் துப்பாக்கி குண்டு தாக்கியதும், மிஸ் ஏஞ்சல் அதிர்ச்சி அடைந்தாள். பயந்து நடுங்கிய அவள்—
ஐயோ! என்ன அது?


காரியதரிசியின் கார் டிரைவர், துப்பாக்கியால் சுட்டு கார் டயரை பஞ்சர் ஆக்கிவிட்டான்!


ஏன் இப்படி செய்கிறார்? என்னால் புரிந்துகொள்ள முடியவில்லையே!


அந்தரங்க செயலாளர் ரோச்சி கீழே இறங்கி—
மேடம்! இதெல்லாம் என்ன? உங்களுக்கு என்று கட்டுப்பாடு, வரையறை உள்ளது!
மிஸ்டர் ரோச்சி! இவர் ஒரு பத்திரிகை நிருபர். இவருடன் பேசுவது என்ன தப்பு?


அப்பாவின் வட கடல் எண்ணெ கம்பெனி அதிகாரிகள் இவரை இங்கே அனுப்பி இருக்கிறார்கள். நான் இங்கிருந்து படகில் இங்கிலாந்து போகப் போகிறேன். என் உயிருக்கு ஆபத்து என்று இவர் சொல்கிறார். நான் அதை நம்புகிறேன்.


இந்த மாதிரி முன்பின் தெரியாத ஆட்களால்தான் ஆபத்து. இவனை நமது டிரைவர் ஹென்றி பார்த்துக் கொள்வான்?


இவரை நான் நம்புகிறேன்.
அம்மா, இந்தக் காலத்தில் யாரையும் நம்பக்கூடாது. முன்பின் தெரியாத ஒரு பெண்தான் உங்க அப்பாவை சுட்டுக் கொன்றது.


சீக்கிரம் டயரை மாற்று. ஏதாவது செய்தாயோ...?


உம்...காரை நீ ஓட்டு. ஏதாவது வம்பு செய்தாலோ. சல்லடையா துளைத்துவிடுவேன். நான் ராணுவத்துல இருந்த ஆள்... எச்சரிக்கை!


திடீர் என்று காரை ஒரு கிடுகிடு பள்ளத்தை நோக்கி ஹென்றி திருப்பச் சொன்னான். ஜேம்ஸ் மறுக்க, ஹென்றி தாக்கினான்!


ஜேம்ஸ் காலால் ஒரு
உதை விட்டார்.


உன்னை சுட்டு
கொல்வதை தவிர
வேறு வழி
இல்லை!


ஹென்றி சுடுவதில் இருந்து தப்பிக்க, ஜேம்ஸ்
கதவைத் திறந்து வெளியே விழுந்தார்.


ஒரு குட்டி கர்ணம் அடித்தார்.


பிறகு அவர் காரை
கிடுகிடு பள்ளத்தில்
தள்ளிவிட்டார்.


அதை ஹென்றி
எதிர்பார்க்கவில்லை.


காருடன் அவன் சமாதி ஆனான்!


மிஸ் ஏஞ்சல் வீடு திரும்பியதும்—
அந்த வெள்ளைக்கார ஆள் என்ன ஆவார்?
மிஸ் ஏஞ்சல்! அதைப்பற்றி நீங்க கவலைப்பட வேண்டாம்!


உங்க அப்பா இறந்துவிட்டதால், எண்ணெக் கம்பெனி பங்குகள் விலை சரிந்து விட்டன. உடனடியா கம்பெனியை அந்த அமெரிக்க பெண்ணுக்கு விற்று விடலாம்!


அதுபற்றி முழு விவரமும் தெரிந்து கொள்ளாமல் என்னால் முடிவு செய்ய முடியாது.
அதுபற்றிய விவரங்கள் அனைத்தும் இதில் உள்ளன. படித்துப் பாருங்க.


அதற்குள் நான் அப்பாவின் டவர் ஆபீசுக்குப் போய், சில வேலைகளை கவனிக்கிறேன்.


பிறகு...
அது ஜேம்ஸ்பாண்ட்!


007 வீட்டுக்குள் வந்தார்.
கார் டிரைவர் ஹென்றி என்ன ஆனுன்?
அவன் என்னே கொல்ல நினேத்தான். நான் அவனே மேல் உலகுக்கு அனுப்பி விட்டேன்.


ஒரு முக்கிய விஷயம் இருக்கு!
மீண்டும் நீயா?


இருவரையும் 007 வெளியே அழைத்து வந்தார்.
என்ன விஷயம்?
கொஞ்சம் பொறுங்க. இதோ இந்த மர பொந்தில் இருக்கு.


மிஸ்டர் ரோச்சி! நீங்க போனில் பேசியதை யாரோ ஒட்டு கேட்டு இந்த கருவியில் பதிவு செய்து இருக்காங்க!


நீங்க கடைசியா பேசிய பேச்சை இப்போ ஒலி பரப்புகிறேன்!
கிளிக்!


ஹலோ... யார் பேசறது?
ரோச்சி பேசறேன். மிஸ் மேக்டாவுடன் பேச வேண்டும்!


அந்த வெள்ளைக்கார ஆள் இங்கே வந்து விட்டான். அவன் ஏஞ்சலை லண்டனுக்கு ரகசியமா படகு மூலம் கொண்டு போக ஏற்பாடு செய்து இருக்கான்!


ரோச்சி! இது உங்க குரல்தான்!
அவனை கார் டிரைவர் தீர்த்து கட்டிவிடுவான். எண்ணை கம்பெனியை உங்களுக்கு விற்க ஏஞ்சலை வற்புறுத்தி வருகிறேன்.


உண்மைதான்! இந்த முட்டாள் குறுக்கிட்டு விட்டதால் என் திட்டத்தில் இனி கொஞ்சம் மாற்றம் செய்கிறேன்.


இந்த டேப்பை கண்டு நான் பயப்பட மாட்டேன்!
என்னைக் கொன்று விட்டு, என் காரை ஒரு பள்ளத்தில் தள்ள உம் டிரைவருக்கு உத்தரவு போட்டீர்.


நான் விபத்தில் இறந்தது போல் காட்ட ஏற்பாடு செய்தீர்.
ஆஹ, கடைசியில் விபத்தில் இறந்தது உம் டிரைவர்தான்.


ஏஞ்சலை நீ கடத்தி போய் இருப்பதா போலீசில் புகார் கொடுத்து உள்ளேன்!


உன்னை கொல்வேன். பிறகு இவளை கொல்வேன். மேக்டா என் காதலி!
அப்படியா திட்டம் போடுகிறாய்? ஒன்றை மறந்து விட்டாய்.


இதுதான் அது!


ரோச்சி எதிர்பாராத நேரத்தில் ஜேம்ஸ் அந்த டேப்ரிக்கார்டரை, அவர் மீது வீசினார்.


அது ரோச்சி தலையில் தாக்கியது. அவர் சுட்ட குண்டில் இருந்து 007 தப்பித்து—


மின்னல் வேகத்தில் கத்தியை வீசினார்.


கத்தி ரோச்சியின் நெஞ்சில் பாய ரத்தம் கொட்டியது. ரோச்சி தள்ளாடினார்.


அவரை கொன்று விட்டீர்!
வா, இங்கிருந்து போய் விடுவோம்.


போலீசுக்கு தகவல் சொல்ல வேண்டாமா?
அதுக்கு நேரம் இல்லே. இந்த டேப்பில் வேறு சதித் திட்டம் அடங்கி இருக்கு.


அது என்ன சதி திட்டம்? எனக்கு புரியலியே!
அந்த மேக்டா ஒரு கார் நிறைய கொலையாளிகளை அனுப்பி இருக்கிறாள்?


என்னை கம்பெனி பங்குகளை நீ விற்க மறுத்தால் கடத்திப் போய் கட்டாயப்படுத்தி வாங்கி, பின் உன்னை கொலை செய்ய திட்டம்!
அதனால் நாம் உடனடியா இங்கு இருந்து போகணும். இல்லையா?


ஜேம்ஸ் காரை ஓட்டினார்.
சரி! இப்போ நாம் எங்கே போகிறோம்? உங்கள் திட்டம் என்ன? அந்த டேப் வைத்தது யார்?


மேக்டாவின் ஆட்களே அந்த டேப்பை வைத்தது. இனி நாம் "கடல் பூத"த்தை சந்திக்கணும்!


ஜேம்ஸ்பாண்டும், மிஸ் ஏஞ்சலும் ஒரு படகுத் துறைக்கு வந்தார்கள்.
கடல் பூதத்தை சந்திக்க- வேண்டுமா? எனக்கு புரிய வில்லையே!


உன் அப்பாவின் தொழில் கூட்டாளியை கடலில் ஒரு பூதம் விழுங்கிவிட்டதா நீ கேள்விபட வில்லையா?


இருவரும் படகில் ஏறிக்கொள்ள படகு புறப்பட்டது.
அந்த கடல் பூதத்தைதான் நாம் சந்திக்க வேண்டும்.
ஆமாம் கேள்வி பட்டேன். மிஸ்டர் மேக், அப்பாவின் நண்பர், கூட்டாளி. அவரை கடல் நாகமோ, பூதமோ கொன்றுவிட்டதாக தெரியும்.


அந்த கடல் பூதம் என்பது கடலுக்கு அடியில் போகும் ஒரு வகை படகு. மிஸ் மேக்டாவின் அற்புத கண்டுபிடிப்பு.


நாம் இப்போ மிஸ் மேக்டா, அவளது கடல் பூதம் எல்லாவற்றையும் சந்திக்க வேண்டும். நமக்கு பாதுகாப்பா கடற்படை கப்பல் வரும்!


நான் உன்னை இங்கிலாந்துக்கு அழைத்து போக இருந்தது மேக்டாவுக்கு தெரியும். அதனால் அவள் நம்மை தாக்க முனையலாம்.


ஏன் மேலே போறீங்க?
ஒரு ஹெலிகாப்டர் சத்தம் கேட்குது.


ஆமா, அதோ.


அது மிஸ் மேக்டா அனுப்பியதா இருக்கும்!
154


அந்த ஹெலிகாப்டர், அவர்கள் படகையே வட்டமிட்டு கீழே இறங்கியதால், அது குண்டு வீசி தாக்க வருவதை புரிந்துகொண்ட ஜேம்ஸ்—


ஏஞ்சல்! ஆபத்து! அது படகை தாக்க இருக்கு!


ஜேம்ஸ்! என்ன செய்றீங்க?
கடலில் குதி!


அடுத்த வினாடி, ஹெலி
காப்டரில் இருந்து
வீசப்பட்ட குண்டு
படகில்
விழுந்து
வெடித்தது.


படகு வெடித்து சிதறி,
கடலுக்குள் ஆழ்ந்தது.
அந்த திடீர்
திருப்பத்தால் மிஸ்
ஏஞ்சல் திக்கு
முக்காடி மயக்கம்
அடைந்தாள்.
ஏய்!
இனி பயம்
இல்லை!


ஜேம்ஸ்
அதோ
பாருங்க!


அப்போது ஒரு பயங்கர
வால் ஜேம்ஸ் தலையை
தாக்கியது.


ஜேம்ஸ் மயக்கம் அடைந்தார். ஆனால் இப்போது சுதாரித்துக்கொண்ட ஏஞ்சல்,
அவரை மயக்கம் தெளிவித்தாள்.
ஜேம்ஸ்!
பேசுங்க! உம்!
பேசுங்க!

ஜேம்சுடன் ஏஞ்சல் கடலில் தத்தளித்த போது, திடீர் என்று கடல் பூதம் எழுந்தது.

கடவுளே இதென்ன? இதுதான் கடல் பூதமா?

ஜேம்ஸ் தலையில் மோதியது இந்த பூதத்தின் வால்தான்!

ஜேம்சுக்கு மயக்கம் தெளியவில்லை. கடல் பூதம் அவர்களை நோக்கி வந்தது. பயங்கர தீ மூச்சு ஜுவாலையுடன் அது நெருங்கியது. ஏஞ்சல் கதறினாள்!

ஐயோ!









ஏஞ்சல்! நான் சொல்வதை கேள்.
நீ தான் மிஸ் மேக்டாவா?


ஆமாம், நான் தான் மிஸ் மேக்டா. வட கடல் எண்ணெ கம்பெனி பங்குகளை நீ எனக்கு விற்று இருக்கணும். சந்தர்ப்பத்தை நழுவ விட்டு விட்டாய்.


இப்போ இந்த பூதத்தின் பிடியில் சிக்கிக் கொண்டாய்!


என்னையும், இந்த ஜேம்ஸ்பாண்டையும் என்ன செய்யப் போகிறாய்? அதை முதலில் சொல்!
எண்ணெ கம்பெனி பங்குகளை எனக்கு விற்கும் வரை நீ உயிரோடு இருப்பாய்.


தலையில் அடிபட்டு இருக்கும் ஜேம்ஸ் உயிர் பிழைத்தால், அவர் பற்றி பிறகு பார்க்கலாம்!


007 பிழைத்து எழுந்தார்.
ஜேம்ஸ்! நாம ரெண்டாவது முறையா சந்திக்கிறோம்!
என் ஹெலிகாப்டரில் வெடி வைத்தாய்.


பிறகு இப்போது நான் வந்த படகில் குண்டு வீச செய்தாய்!


எல்லாவற்றிலும் நீர் தப்பித்து விட்டதால் உமக்கு ஒரு சலுகை தருகிறேன்!


என் ரோச்சியை கொன்றுவிட்டீர். பரவாயில்லை.
அவனைவிட சக்தியும். திறமையும் உள்ள உம்மை என்னுடன் பணி ஆற்ற அழைக்கிறேன்.


நல்ல ஊதியம் தருகிறேன். பங்கு வேண்டுமானாலும் தருகிறேன். இந்த சலுகையை பயன் படுத்திக்கொள்ளும்.


வாரும்! என் நீர்மூழ்கி கப்பலை சுற்றி காட்டுகிறேன்


அதிக சக்திவாய்ந்த அணு ஜெட் என்ஜின்களால் இந்த நீர்மூழ்கி செல்கிறது. கம்பியூட்டர் மூலம் இது கட்டுப்படுத்தப் பட்டு உள்ளது.


இந்த கடல் பூதத்தின் கண்கள் ரெண்டு டெலிவிஷன் கேமராக்கள். தலையை இங்கும் அங்கும் திருப்பினால் அந்த கேமராக்கள் உதவியால் நாலா திசையிலும் பார்க்கலாம்.


இந்த நீர்மூழ்கியில் ஆயுதம் இல்லையா?
போர் கப்பலில் உள்ளது போல் பல ஆயுதங்கள் உள்ளன. ஒரு புதிய ஆயுதமும் இருக்கு!


ஜேம்ஸ், ஏஞ்சல் இருவரிடமும் மிஸ் மேக்டா விளக்கினாள்—


கடல் கண்ணி, ஏவுகணை இவற்றுடன் புதிய ஆயுதமும் இருக்கு. வட கடல் எண்ணெ கம்பெனியின் துளை போடும் கருவி, எண்ணெ எடுக்கும் மேடை இவை தான், புதிய ஆயுதத்தில் இலக்கு.


மேக்டா, என்ன சொல்றே?


மிஸ் ஏஞ்சல்! புரியலியா உனக்கு? உங்க எண்ணெ கம்பெனியின் உற்பத்தி சாதனங்களை அழித்து நாசம் செய்யப் போகிறேன்.
AIR LOCK


உன் தந்தையும், அவர் கூட்டாளிகளும் எண்ணை கம்பெனியை எனக்கு விற்க மறுத்து விட்டனர்.


அதனால். எண்ணை கம்பெனியின் மூன்று கூட்டாளிகளையும் தீர்த்து கட்டினேன்.


அந்த எண்ணை கம்பெனி சட்ட திட்ட விதிகள்படி உயிரோடு இருக்கும் கூட்டாளிக்கு மற்றவர் பங்குகள் போகும். அதன்படி உன் தந்தைக்கு வந்தது. இப்போது உனக்கு வந்திருக்கு.


ஏஞ்சல் நீ இறந்துவிட்டால், உன் கம்பெனியின் பங்குகள் ரொம்ப குறைந்த விலைக்கு விற்பனை ஆகும்.


அதோடு, எண்ணை கம்பெனியின் உற்பத்தி அமைப்புகள் சேதப்பட்டால் விலை இன்னும் சரியும். நான் எளிதாக வாங்கிவிடுவேன்.


எண்ணை உற்பத்தி சாதனங்களை எப்படி அழிக்க முடியும்? அப்படியே அழித்தாலும் சதி வேலை என்று செய்தி பரவி விடாதா?

அதற்கு வழி இல்லாமல் செய்யவே இந்த கடல் பூதம். இதுதான் எண்ணை கம்பெனி சாதனங்களை அழிக்கப் போகுது. எப்படி தெரியுமா?




அந்த வால் பகுதியை முழுவதும் தண்ணீரால் நிரப்பினால், அது பயங்கர அழிவு ஆயுதம் போல் தாக்கும். அதன் வேகம் தாங்காமல் துளை போடும் கருவி, எண்ணை எடுக்கும் மேடை எல்லாம் சேதப்படும்!




அதற்காக இந்த விசையை இழுத்தால் போதும். 5 நிமிடம்தான்!

மிஸ் மேக்டா! அந்த ஐந்து நிமிடம் அடியேனுக்கு போதும்.

இந்தா ஒரு கராத்தே அடி!


ஒரே அடியில் மிஸ் மேக்டாவை வீழ்த்திய ஜேம்ஸ், அடுத்து மின்னல் வேகத்தில் தலைமை மாலுமி, துணை மாலுமி இருவரையும் வீழ்த்தினர்.


ஆபத்துக்கு பாவம் இல்லை. பெரிய அழிவை தடுக்கணும்!


உன் துப்பாக்கி எனக்கு தேவை.


ஜேம்ஸ்!
பயப்படாதே! அவர்களுக்கு மயக்கம்தான். வா, விரைந்து செயல்படுவோம்!


ஏய்! என்னைப் பற்றி கவலை வேண்டாம். அந்த ஜேம்சை பிடி!


ரிங்ங்ங்!
மணி சத்தம் கேட்குது. அவன் வெளியே போகிறான்.


கடல் பூதம் என்ற அந்த நீர்மூழ்கி கப்பலில் ஒரு அவசர வழி இருந்தது. அதன் மூலம் ஜேம்ஸ் தப்பித்தார்.


உங்க இடத்துல உட்காருங்க. அவனை சீக்கிரம் கண்டுபிடித்து விடலாம்.


இந்த கடல் பூதத்தை இந்த துப்பாக்கியால் அழிக்க முடியா விட்டாலும், அதுக்கு கொஞ்சம் தலைவலியை கொடுக்கிறேன்.


டெலிவிஷன் கேமராவால் தேடிவிட்டோம். அவன் எங்கே இருக்கிறான் என்று தெரியவில்லை.
காற்றில் அவன் மாயமா மறைய முடியாது. சரியா பாருங்க!


கடல் பூதத்தில் 007-


அம்மா! நமது டி. வி. கேமரா திரையின் இயக்கம் நின்று விட்டது.
அவன் கேமரா கண்களை சுட்டு விட்ட மாதிரி தெரியுது!


"வட கடல் எண்ணெ கம்பெனி"க்கு சொந்தமான அந்த எண்ணெக் கிணறு மேடையில் ஒரு ஹெலிகாப்டர் வந்து இறங்கியது.


அங்கே அந்த பயங்கரத்தை பார்த்தீர்களா?
பயங்கரமா? என்ன பயங்கரம்? எங்கே?


ஒரு பயங்கர ஜந்து, எண்ணெ மேடையை நோக்கி வருது!


உடனே அவர்கள் பைனகுலர் மூலம் பார்த்தனர். ஜேம்ஸ் நீந்தி வருவதும், அவரை கடல் ஜந்து துரத்தி வருவதும் தெளிவாக தெரிந்தது.


நம் முதலாளி மேக்கை உயிரோடு விழுங்கிய அதே ஜந்துதான்!
முதலில் அந்த ஆளை காப்பாற்ற வேண்டும். ஒரு கயிரை கீழே போடுவோம்.
ஜேம்ஸ்பாண்டை நோக்கி ஒரு கயிரை வீசினர். அதை பிடித்துக் கொண்டு ஜேம்ஸ் மேலே வந்தார். ஒரு கண்டம் தப்பித்த நிம்மதியில்!
நீங்க எங்கே இருந்து வாரீங்க?
அந்த பயங்கர எந்திர ஜந்துவின் வயிற்றில் இருந்து!
ஆமா. அது ஒருவகை நீர்மூழ்கி நாசகார கப்பல். பெண்கள் இயக்குகிறார்கள். இந்த மேடையை சேதப்படுத்துவது அவர்கள் திட்டம்!
அது எந்திரமா? என்ன ஆச்சரியம்!
கொஞ்ச நேரத்தில் கடல் பூதம் தாக்க ஆரம்பித்தது. டன் கணக்கில் தண்ணீர் நிரப்பப் பட்ட அதன் வால், எண்ணை மேடை தூண்களை அசுர வேகத்தில் தாக்கியது.
தூண் சேதம் அடைந்தால்,, இந்த அமைப்பு முழுவதும் நாசமாகும்!
கொஞ்சம் பெட்ரோல் கொடுங்க. அந்த பளு தூக்கும் எந்திரத்தை இங்கே திருப்புங்க... அவசரம்!

ஜேம்ஸ் தனது திட்டத்தை விவரித்தார்.

அந்த பூதத்தின் டி. வி. கண்களை ஏற்கனவே தகர்த்து விட்டேன். ஆனால் ராடார் கருவிகளும், மற்றும் ரேடியோ, சோனர் கருவிகளும் அதன் தலை பகுதியில் உள்ளன.

அவை வேலை செய்கின்றன. அவற்றை அழித்துவிட்டால், அதால் தாக்க முடியாது!

வெரிகுட்! கிரேன் ஆப்பரேட்டரிடம் சொல்லுங்க. நான் அந்த கொக்கியில் ஏறி போகிறேன்!

இதோ பெட்ரோல்!

அடுத்த நிமிடம்...

டெலிவிஷன் கேமரா கண்கள் இல்லா விட்டால் கூட, சோனர் திரை மூலம் ஜேம்சை பார்த்த அந்த பூதம் அவரை விழுங்க வாயை பிளந்தது.

இன்னும் நல்லா திற!

என்னை மேலே தூக்குங்க.

அந்த பெட்ரோல் பாட்டிலில் ஜேம்ஸ் தீ வைத்து உள்ளே போட்டதால் அது குண்டு போல் வெடித்தது.


கடல் பூத கப்பலுக்குள் —
வெளியே ஒன்றுமே தெரியவில்லை. கட்டுப்பாடு இயக்கம் தகர்ந்து விட்டது.
செத்துபோன இந்த கடல் பூதத்தை நம்பி பயன் இல்லே! வாருங்கள்!
அந்த வெடி, நீர்மூழ்கி கப்பலின் எல்லா கட்டுப்பாடு கருவிகளையும் நாசம் செய்துவிட்டது.


அடுத்த திட்டத்தை நிறைவேற்று-வோம். ஏய் ஏஞ்சல் நில்! ஓடாதே!


எங்களுக்கு இங்கே சமாதி கட்டிவிட்டு நீங்க மட்டும் போக முடியாது!
நானும், பணய கைதி ஏஞ்சல் இருவர் மட்டும் வெளியேற போகிறோம்!
CAPSULE HATCH


தப்பிப் போக பயன்படும் இந்த எந்திர படகில் இருவருக்குதான் இடம் இருக்கு!


ஒருத்தி செத்து விழுந்தாள்.
பயப்பட வேண்டாம்! என் திட்டம் நிறைவேறியதும் உங்களை காப்பாற்றுவேன்! உங்களை கைவிடவே மாட்டேன். என்னை நம்பலாம்.

உயிர் தப்ப பயன் படும் அந்த நெருக்கடி கால குட்டி படகில் மேக்டா ஏறி—

ஏய்! ஏஞ்சல், பேசாமல் என்னுடன் வா. இல்லை உன்னையும் கொல்வேன்!
















கடல் பூதத்தை தகர்க்கும் குண்டை மேக்டா வெடிப்பதற்குள்—
ஜேம்ஸ்!


ஜேம்ஸ்பாண்ட், அந்த மினி நீர்மூழ்கி படகின் முன்பக்க கண்ணாடியை அந்த பெரிய ஸ்பேனரால் அடித்து உடைத்தார்.


வா! உனக்கு முடிவு கட்டிவிட்டுதான் அடுத்த வேலை.


ஆனால்...


தாக்கப்பட்ட அதிர்ச்சியில், மிஸ் மேக்டா, வெடிகுண்டு தொலை கட்டுப்பாட்டு கருவியை அழுத்திவிட்டாள்.

அவ்வளவுதான், கடல் பூதம் என்ற அந்த நவீன நீர்மூழ்கி வெடித்து சிதறியது.

மினி நீர்மூழ்கி படகும், தூக்கி வீசப்பட்டு சேதம் அடைந்தது.

ஜேம்ஸ்! காப்பாத்துங்க! காப்பாத்துங்க! படகுக்குள் தண்ணீர்! மூழ்கிவிடும்!

மிஸ் ஏஞ்சல் பரிதாபமாக கதறினாள்.

ஜேம்ஸ்! உதவி! உதவி!

என்னை கீழே இறக்குங்க!







அடுத்த சில நிமிடங்களில், மிஸ் மேக்டா, மிஸ் ஏஞ்சல் ஆகியோருடன் அந்த மினி நீர்மூழ்கி மேலே தூக்கப்பட்டது.























ராணி சிண்டிகேட் சார்பில் வெளியிட்டவர், ஆசிரியர்: எஸ்.ராமஜெயம், 1091, பெரியார் நெடுஞ்சாலை, சென்னை—600 007. அச்சிட்டவர்: சி.கல்யாணசுந்தரம், ராணி அச்சகம், 1091, பெரியார் நெடுஞ்சாலை, சென்னை—600 007.



# தொடர் கொலை!



சித்ராமணாளன்

## 2. முதல் கொலை!

அந்த விமான விபத்து, இந்தியா முழுவதும் பரபரப்பை ஏற்படுத்தியது.

இறந்தவர்கள் விவரத்தை பத்திரிகைகள் பத்தி பத்தியாக வெளியிட்டன.

விமான விபத்துக்கான காரணம் என்ன என்று பலவகையான கருத்துகள் தெரிவிக்கப்பட்டு இருந்தன.

விமான விபத்தில் இறந்தவர்களில் முக்கிய புள்ளியாக, கிரிக்கெட் அணி கேப்டன் விஷ்ணு உடையார் கருதப்பட்டார்.

படுத்த படுக்கையாக கிடந்த ராஜா வேடப்ப உடையார், தன் மகன் இறந்த செய்தி அறிந்து மிகவும் அதிர்ச்சி அடைந்தார். மருமகள் துர்காதேவியாவது பிழைத்து எழ வேண்டுமே, என அவர் வேண்டாத தெய்வம் இல்லை.

வேடப்ப உடையாரின் பேரனை இளவரசன் நந்தன் உடையார், அப்பா இறந்த செய்தி அறிந்து அழுதுகொண்டே இருந்தான். அவனைத் தேற்ற முடியாமல் வேடப்ப உடையார் துடிதுடித்தார்.

"பம்பாய் போகக்கூடாது!" என்று டாக்டர்கள் தடுத்துவிட்டதால், வேடப்ப உடையார் மேலும் துக்கம் அடைந்தார்.

விஷ்ணு உடையாரின் உடலை ராணிமங்கலம் கொண்டுவர ஏற்பாடுகள் நடந்து வந்தன.

காயம் அடைந்தவர்கள் பம்பாயில் நவீன ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டு இருந்தார்கள்.

துர்காதேவி உடம்பில் பல இடங்களில் பலத்த அடிபட்டு இருந்தது. கணவன் இறந்த துயரம் அவளை ஆழ்த்தியது. கணவன் தன் கண் முன்னால், தன் மடி மீது தலைவைத்து, தலை சாய்ந்ததை, அவளால் ஜீரணிக்கவே முடியவில்லை. அந்த அதிர்ச்சி அவளை பெரிதாக பற்றிக்கொண்டது. அவள் கண்கள் கண்ணீரை சிந்திக்கொண்டே இருந்தன. அவள் அடிக்கடி மயக்கம் அடைந்தாள்.

கல்யாணும் சிகிச்சை பெற்று வந்தான். துர்காதேவிக்கு "ஏர்கண்டிஷன்" செய்யப்பட்ட அறை ஒதுக்கப்பட்டு இருந்தது. அதே மாதிரி அறை கல்யாணுக்கும் ஒதுக்கப்பட்டது.

கல்யாண் காலில் பலத்த கட்டு போடப்பட்டு இருந்தது. பின்-தலையில் ஏற்பட்ட காயத்துக்கும், கட்டு போடப்பட்டு இருந்தது.

விமான விபத்து, காயம் இவை பற்றி எல்லாம் கவலை இல்லாதவன் போல் அவன் குஷாலாக காணப்பட்டான். அருகில் இருந்த வெளிநாட்டு டேப்ரிக்கார்டரில் வெளிநாட்டு சங்கீதம் அலைபாய்ந்து கொண்டிருந்தது.

விமான விபத்து பற்றிய செய்தியை பத்திரிகைகளில் அவன் படித்துக்கொண்டு இருந்தான்.

காயம் அடைந்தவர்கள் பட்டியலை அவன் நோட்டமிட்டான்.

அதில் "சுப்பிரமணிய கங்காதரன்" என்ற பெயர் அவன் கண்களில் பட்டதும் அவன் ஒரு நமட்டு சிரிப்பை உதிர்த்தான். ஏன் என்றால் அவன் அந்தப் பெயரில் உள்ள "பாஸ்போர்ட்"டில்தான் லண்டனில் இருந்து பம்பாய் திரும்பினான். அந்தப் பெயரில்தான் அந்த விமானத்தில் டிக்கெட் எடுத்து இருந்தான்.

பாத்ரூமில் இருந்து வெளிப்பட்ட அவன் கூட்டாளி பட்டேல், "கல்யாண்! நல்லா குளிச்சுட்டேன். ஆமா, ராத்திரி நல்லா தூங்கினியா? வலி ஒண்ணும் இல்லையே!" என்றான் மராட்டிய கரகரப்புடன் கூடிய தமிழில்.

"டேய் முட்டாள்! நான் கல்யாண் இல்லை. சுப்பிரமணிய கங்காதரன்! இந்த ஆஸ்பத்திரியை விட்டு வெளியேறும் வரை அது தான் பெயர். மறந்துவிடாதடா மண்டு!"

"சுப்பிரமணிய கங்காதரன்! டேய், சொல்ல கஷ்டமா இருக்குடா?"

"டேய்! உனக்குதான் தமிழ் நல்லா வருதே. பிறகு என்ன கஷ்டம்?"

"இல்லைடா, அந்தப் பெயர் ரொம்ப நீளமா கஷ்டமா இருக்குடா. ஏதாவது பண்ணுடா!"

"சரி. எஸ். கங்காதரன் அப்படீன்னு கூப்பிடு. ஆனா, தப்பித் தவறி யாரிடமாவது கல்யாண் என்று சொல்லி காலை வாரி விட்டுவிடாதே!"

கதவு தட்டப்பட்டது. பட்டேல் போய் கதவைத் திறந்தான்.

வந்தது, பாட்சா!

கல்யாணின் இன்னொரு கூட்டாளி.

அவன் வந்தும் வராததுமாய், "டேப்"பில் ஓடிய இசைக்கு தக்க உடலை நெளித்து ஆட ஆரம்பித்தான்.

பேப்பரை அவன் மீது விட்டெறிந்த கல்யாண், "டேய்! சோம்பேறி! வந்ததும் வராததுமாய் என்னடா ஆட்டம்?" என்றான்.

"டேய்! பாத்தியா, பாத்தியா? நான் காலையிலே எழுந்து எவ்வளவு சுறுசுறுப்பா வேலைகளைச் செய்து இருக்கேன். சோம்பேறி என்கிறியே. வாபஸ் வாங்குடா!"

"வாபசா? அது கல்யாண் வாழ்க்கையிலேயே கிடையாதே!"

"வேண்டாம். நீ வாபஸ் வாங்காவிட்டால் நான் உனக்கு ரெண்டு

நல்ல செய்திகளைச் சொல்ல மாட்டேன்!''—பாட்சா முறைத்தான்.

“நீ சொல்லவே வேண்டாம்!''—கல்யாண் அலட்சியம் காட்டினன்.

“நல்ல செய்தியா? சொல்லுடா, சொல்லுடா'' இடையில் பட்டேல் குறுக்கிட்டான்.

“சரி! பட்டேல் பையா. நீ கேட்கிறதால சொல்றேன். இந்த கல்யாண் பயல்...''

பாட்சா தலையில் பட்டேல் நறுக்கென்று குட்டினன்.

பாட்சா இந்தியில் கெட்ட வார்த்தை சொல்லி திட்டிக்கொண்டே, அழுவது போல் நடித்தான்.

“பாட்சா கண்ணு அழாதேடா. பால் குடிக்கிறியா?''—கல்யாண் கேட்டான்.

“பின்ன என்னடா! இந்த பட்டேல் பய எப்ப பார்த்தாலும் என் தலையில் நறுக் நறுக்குன்னு குட்டுறன். எங்கம்மாவே என்னை இப்படி குட்டினது இல்லை. போகட்டும். எங்க வாத்தியார், அவர் கூட இப்படி குட்டினது இல்லை! எனக்கு 2½ கழுதை வயசாகிறது. இவன் மரியாதை இல்லாமல் குட்டுகிறன்!''

வடியாத கண்ணீரை பாட்சா முகத்தில் பட்டேல் துடைத்தான்.

“ஒண்ணும் வேண்டாம்!'' — பாட்சாவின் அழுகை — நடிப்புப் படலம் நீண்டது.

“பாட்சா! கண்ணு இல்லே! விஷயத்துக்கு வாம்மா!'' கல்யாண் சமாதானப்படுத்தினன்.

“ஒண்ணும் வேணும். அவன் எதுக்கு தலையில் குட்டினன் என்பதற்கு விசாரணை கமிஷன் போடணும். இல்லை, நான் ஒத்துக்க மாட்டேன்''—பாட்சா பிணங்கினன்.

கல்யாண் பட்டேலை பார்த்து, “ஏண்டா அவனை அப்படி குட்டினே?'' என்று கரிசனமாக விசாரித்தான்.

“பின்ன என்னடா, அவன் உன்னை எஸ். கங்காதரன் அப்படீன்னு சொல்லாமல், கல்யாண் அப்படீன்னு சொல்றனே. அதுதான் அவனை எச்சரிக்க குட்டினேன். இப்போ, நீ...யார்...? இல்லை, யார் என்கிறேன்?''

“நான், சுப்பிரமணிய கங்காதரன்!''—கல்யாண் முறுவலித்தான்.

அழும் தொனியை பாட்சா விடாமல், “அது எனக்குத் தெரியாதா? இந்த சோட்டாப் பயல் பட்டேல் சொல்லித்தான் தெரியணுமா? இப்போ நமக்குள்ளேதானே பேசிக்கொள்றேம். அதனலதான் உன் உண்மைப் பெயரை சொன்னேன்!''

“எதுக்கும் முன் எச்சரிக்கையா இருப்பது நமக்குதானே நல்லது. அதனல்தான் அவன் தலையில் எச்சரிக்கை மணி அடித்தேன்!'' ஆரஞ்சு ஜூஸை பிழிந்துகொண்டே, பட்டேல் சமாளித்தான்.

“ஆமா! பெரிய எச்சரிக்கை. வெளியே இப்பவே, ரகசிய போலீசோ, இல்லை, சி. பி. ஐ. ஆட்களோ ரெண்டு பேர் சந்தேகப் படும்படியா நடமாடுறங்க.''

“இதுதான், நீ சொல்ல வந்த நல்ல விஷயம் நம்பர் ஒண்ணு?''

“ஆமா!''

கல்யாண் அருகே கட்டிலில் பாட்சா அமர்ந்தான்.

எல்லோர் முகத்திலும் சுறுசுறுப்பு களை கட்டியது.

"அடுத்த விஷயம் என்னடா?"

"உன் லக்கேஜ் எல்லாம் சேதாரம் இல்லாமல் பத்திரமா கிடைச்சு போச்சு!"

"வெரிகுட்!"—உற்சாகமாக் கூறிய கல்யாண், "டேய்! உங்க ரெண்டு பேர் கிட்டேயும் சொல்ல வேண்டிய முக்கிய விஷயம் ஒன்றிருக்கு!" என்றான்.

"என்னடா?" என்பது போல் இருவரும் கல்யாண் முகத்தை ஏறிட்டு பார்த்தனர்.

"டேய் பசங்களா! விமான விபத்தில் இளைய ராஜா விஷ்ணு உடையார் என்ற கிரிக்கெட் கேப்டன் செத்து போனார் இல்லையா?"

"ஆமா!"

"அந்த ஆள் சாவதற்கு முன் தன் மனைவி துர்காதேவியிடம், "துர்க்கா! நம் மகன் நந்தனுக்கு சேரவேண்டிய பெரும் செல்வம் இருக்கு. பல கோடி மதிப்பு உள்ள வைரம், வைடூரியம் அது. அதன் ரகசியம் எனக்கும் அப்பாவுக்கும்தான் தெரியும். அப்பா அரைஞாண் கயிற்றில், ஒரு தங்கத் தாயத்து இருக்கு. அதில்...அதில்..." என்று கல்யாண் இழுத்தான்.

"அதில்...அதில்...! அதில் என்னடா?"—இருவரும் கல்யாணிடம் கேட்டனர்.

"அவ்வளவுதான். அத்தோடு அந்த ஆள் உயிரை விட்டுவிட்டார்" கல்யாண் சலிப்புடன் கூறினான்.

கூட்டாளி நண்பர்கள் மூவரும் ஒரு நிமிடம் அமைதியாக இருந்தனர்.

பிறகு பட்டேல், கல்யாணிடம் "டேய் கல்யாண்! இது விஷயத்துல நாம அடுத்து செய்ய வேண்டியது என்னடா?"

இரண்டு நிமிடம் யோசனையில் ஆழ்ந்த கல்யாண் பட்டேலிடம், "டேய் கம்பெனிகளா! நான் ஒரு லட்சியவாதி என்பது உங்க ரெண்டு பேருக்கும் தெரியும். இல்லையா? கொலை, கொள்ளை, கற்பழிப்பு இந்த மூணும் நமக்கு ஒத்துவராத தொழில். ஏதோ நாடு விட்டு நாடு வியாபாரம் பண்றோம். அது நம்ப பொருளாதாரத்தையும், இந்த நாட்டு பொருளாதாரத்தையும் உயர்த்த!"

"அதுதான் தெரிந்த விஷயம் ஆச்சே!"

"ஆமாண்டா. அதை மீண்டும் ஞாபகம் வச்சுக்கோ! இந்த ரகசிய செல்வம் பற்றி நாம் மேற்கொண்டு வேலைகளில் ஈடுபட்டால், அது "கொள்ளை கூடாது!" என்ற எனது லட்சியத்துக்கு எதிர் ஆகி விடாதா? அதை, டேய் பட்டேல், நீ யோசித்து சொல். அதற்கு இடையில், டேய் பாட்சா! அந்த துர்காதேவி இப்போ எங்கே இருக்கிறாள் என்று கண்டுபிடி!"—நண்பர்களுக்கு உத்தரவு போட்டுவிட்டு கல்யாண், ஆரஞ்சு ரசத்தை உறிஞ்சினான்.

★ ★ ★

இரவு.

துர்காதேவி அப்போதுதான் கண்விழித்தாள்.

தலையை வலித்தது.

அதற்குமேல் உடல் முழுவதும் வலி.

அதற்கும்மேல் நெஞ்சில் வலி!

"உங்கள் புருஷன் பாடியை மெட்ராஸ் கொண்டு போக ஏற்பாடு நடக்குது. டாக்டர்கள் பேசிக்கொண்டார்கள், மேடம்!"—மாலையில் நர்ஸ் கூறிய அந்த வார்த்தைகள் அவள் காதுகளில் இடி ஒலியாய், இறங்கி அவளது நெஞ்சக் கூட்டில் சம்மட்டி அடியாய் வலித்தது.

புருஷன் பாடி!

புருஷன் பாடி!—ஆம்; அவளது ஆசைக் கணவன், அன்புக் கணவன் வெறும் "பாடி" தான், இனி!

"பாடி!"—"பிணம்!"—அடக் கடவுளே. துர்க்காதேவி தலையில் அடித்துக்கொண்டு அழுதாள்.

அவளது தாய், தந்தை இறந்தபோது அவளுக்கு இந்த உலகம் இருண்டு போகவில்லை.

காரணம் அவளது கணவன் செஞ்சூரியனாய் பிரகாசித்தான்.

இப்போது அந்த சூரியன் மறைந்துவிட்டது!

இனி அவள் உலகத்தில் இருட்டு! கும்மிருட்டு! விடியாத, முடியாத இருட்டு!

துர்காதேவியால் நிம்மதியாக இருக்க முடியவில்லை.

கணவனின் களை பொருந்திய முகத்தை கடைசி முறையாக பார்க்க வேண்டும் போல் அவளது ரத்தத்தின் ஜீவ அணுக்கள் ஒவ்வொன்றும் துடித்தன.

முடியவில்லையே! பார்ப்பதற்கு வழி இல்லையே! அத்தான்! அத்தான்!—துர்கா அழுகையில் வெடித்தாள்.

இந்த ஆஸ்பத்திரி, சிகிச்சை, இந்த வாழ்வு அத்தனையும் அறுத்துக் கொண்டு கணவனுடன் ஒட்டிக்கொள்ள வேண்டும் போல் அவளுக்குள் ஆவேசம் ஓங்காரமிட்டது. முடியவில்லையே! அதற்கு வழி இல்லையே!

துர்காதேவி ஒரு காகிதத்தை எடுத்து கஷ்டப்பட்டு தன் மகன் நந்தனுக்கு ஒரு கடிதம் எழுதினாள்.

அன்புச் செல்வன் நந்தனுக்கு,

கண்ணா! அப்பா போய்விட்டார். நம்மை அனாதை ஆக்கிவிட்டு போய்விட்டார். எத்தனை செல்வம், வசதிகள் நமக்கு இருந்து என்ன செய்ய? அப்பா இல்லாத வாழ்க்கை, வெறும் சூன்யம்தான். இது எல்லாம் எனக்குதான்.

கண்ணே நந்தா! நீ வாழவேண்டியவன். உன் அப்பாவின் புகழை நிலைநாட்ட வேண்டியவன். நான் உயிரோடு இருப்பேனா என்ற சந்தேகம் வந்துவிட்டது. அதனால் இதை எழுதுகிறேன்.

நந்தா! உன் தகப்பனார் இறப்பதற்கு முன் கோடிக்கணக்கான வைரம், வைடூரியம் உனக்கு இருப்பதாகவும், அதன் ரகசியம் உன் தாத்தா மகாராஜா வேடப்ப உடையாரின் அரைஞாண் கயிற்றில் உள்ள தங்கத் தாயத்தில் இருப்பதாகவும் சொன்னார். நீ அதை உன் தாத்தா விடம் கேட்டு தெரிந்துகொள்.

நன்றாக படி. குடும்ப கவுரவம், செல்வாக்கு இவற்றை காப்பாற்று.

அன்பு அம்மா,
துர்காதேவி.

கடிதத்தை மடித்தாள். அழைப்பு மணியை அடித்தாள்.

நர்ஸ் வந்தாள்.

ஒரு கவர் கேட்டு வாங்கினாள்.

பிறகு அதை நர்சிடம் கொடுத்து "இதை என் மகனிடம் சேர்த்து விடும்படி டாக்டரிடம் சொல்லிவிடுங்கள்!" என்று கூறினாள்.

நர்ஸ் போய்விட்டாள்.

துர்காவுக்கு மயக்கமாக வந்தது.

நள்ளிரவு.

ஆஸ்பத்திரி தூங்கிக் கொண்டிருந்தது.

முகம் தெரியாதபடி, முகத்தை மறைக்கும் "ஹெல்மட்" அணிந்த இரண்டு பேர், அந்த அறைக்குள் நுழைந்தனர்.

இருவரும் துர்காதேவியை தூக்கினர்.

அவள் விழித்துக்கொண்டு அலக்க, மலக்க விழித்தாள்.

ஏதோ விபரீதம் என்று புரிந்து கூச்சல் போட வாய் பிளந்தாள்.

அதற்குள் அவர்கள் அவள் வாயைப் பொத்தினர்.

அவள் துடித்தாள். அவர்கள் அடக்கினர்.

சிகிச்சைக்கான வைத்திய இணைப்புகள் விடுபட்டன.

வாயைப் பொத்த நினைத்த அவர்கள், அவள் மூக்கையும் சேர்த்து பொத்தி இருந்தனர்.

அறையின் பின்புற கதவைத் திறந்தனர்.

அவளை அப்படியே தூக்கிச் சென்று, தயாராக நின்ற "வேனி"ல் ஏற்றினர்.

அப்போதுதான் தெரிந்தது, அவள் இறந்துவிட்டாள் என்பது.

"இவளைத் தூக்கிக்கொண்டு வரவேண்டும் என்பதுதானே நமக்கு உத்தரவு. நாம் இவளைக் கொன்றுவிட்டோமே!" ஒருவன் கிசுகிசுத்தான்.

"ஆ! கொலை!"—மற்றவனும் அதிர்ந்தான்.

"அடுத்து என்ன செய்ய?"

"இவளைத் தூக்கி, அவள் அறையிலேயே போட்டுவிடுவோம். இல்லை, சிக்கல்!"

மர்ம ஆசாமிகள் இருவரும், யார் கண்ணிலும் படாமல், துர்காவை—இல்லை, அவள் பிணத்தை அவள் அறைக்கு கொண்டு போய், படுக்கையில் கிடத்தினர்.

பிறகு ஒரு மர்ம ஆசாமி அடுத்தவன் காதில் ஏதோ கிசுகிசுத்தான்.

அதற்கு அவன், "கரைக்ட். அதுதான் சரி. அப்படியே செய்வோம். இல்லை, நாம் தப்ப முடியாது!" என்று கூறினான்.

பிறகு இருவரும், அந்த அறையில் இருந்து நைசாக வெளியேறினர்.

(இந்தக் கதையின் தொடர்ச்சி அடுத்த இதழில் வெளிவரும்.)

உங்கள் கருத்து

# மீன் படை!

"மீன் படை!" சித்திரக் கதையில் மீன்களிடம் இருந்து "டைகர்" தப்பித்த விதம் என் உடலை புல்லரிக்கச் செய்தது!

—டி. மூர்த்தி, திருப்போரூர்.
—ஆர். தருமன், வடவள்ளி, கோவை-41.
—ஏ. சுப்பிரமணியம், கைக்கோளபாளையம்.

புத்தாண்டு பரிசாக வந்த மீன் படை அற்புதம், அபாரம்!

—எஸ். கோகுலகிருஷ்ணன், புதுக்கோட்டை-2.
—எச். பாத்திஷா மரைக்கான், திட்டச்சேரி-3.
—கே. சத்திவேலன், சோளங்காபாளையம்.

பாட்சாவின் சதித் திட்டங்களை சூப்பர் ஹீரோ டைகர் முறியடிக்கும் விதம் நல்ல சாகசங்கள்!

—லட்சுமிப்பிரியா, பெங்களூர்-53.

பயங்கரவாதியாக இருந்தாலும், பாட்சாவின் திறமைப் பாராட்டதக்கதே! —டி. துரை, எம். ஜி. ஆர். நகர், சென்னை-78.

பயங்கரவாதி பாட்சா! டைகரிடம் பலிக்காது உன் பாச்சா!

—செ. தமிழ்ச்செல்வி மின்சிவா, நாகர்கோவில்-1.

குண்டு துளைக்காத குடையை வைத்துக்கொண்டு, எதிரிகள் குண்டில் இருந்து லண்டனை காப்பாற்றுவது அட்டகாசம்!

—அ. ரமேஷ் கணேசன், கடலூர்-3.
—எம். விகாயத்துல்லா, திருவள்ளூர்.
—எஸ். லட்சுமணன், மதுரை-9.
—சிவ. கணேசன், காஞ்சிபுரம்.
—என். சக்திவேல், பூமாண்டன் வலசு.

பாவம்! டைகருக்கு ஒரு கதாநாயகி கூட இல்லையா? ஹென்றியை கூட்டிக்கொண்டு அலைகிறாரே!

—எம். அப்துல் காதர் மைதீன், புடமங்கலம்.

கதை முடிவில், பாட்சாவைக் கொல்லாதது இனியும் அந்த ஆள் எந்த சதி வேலை செய்வாரோ என்று பயமாக இருக்கிறது!

—சி. பி. கோஸ், சீப்ளாபுத்தூர்.

பொங்கல் மலரில் சித்ரா மணாளன் தொடர்கதையா? சர்க்கரைப் பொங்கல்தான்! —ஜெயா சத்யநாராயணன், கொடுமுடி.

—எஸ். டெய்சி, கும்பகோணம்-4.

அமைதியான எங்கள் வீட்டில், ராணி காமிக்ஸ் வரும் நாளில், ஒரு குட்டி கலாட்டாவே நடக்கிறது!

—என். ரவிக்குமார், கிருஷ்ணாபுரம்.

கதிரவன் மறப்பதில்லை, காலையில் உதித்திட!
நிலவும் மறப்பதில்லை, குளிர் ஒளி தந்திட!
மலர்கள் மறப்பதில்லை, மணத்தை பரப்பிட!
கடலும் மறப்பதில்லை, அலைகளை எழுப்பிட!
நாங்கள் மறப்பதில்லை, ராணி காமிக்ஸ் படித்திட!

—எம். ஜெயந்தி சரவணன், சென்னை-12.

# ரூ. 50-பரிசு: கருத்துப் போட்டி-31

"கடல் பூதம்!" சித்திரக் கதையை படித்துவிட்டீர்கள் அல்லவா? இனி இந்தக் கதையில், உங்கள் மனதைக் கவர்ந்த சம்பவம் எது? அதற்கான காரணம் என்ன என்று உங்கள் கருத்தை, "ராணி காமிக்ஸ்", ஒரு பக்க அளவுக்கு மிகாமல், எழுதி அனுப்புங்கள்.

மிகச் சிறந்த கருத்துக்கு ரூ. 50 பரிசு வழங்கப்படும்.

தேர்ந்து எடுக்கப்பட்ட கருத்து, 1–3–86 இதழில் பிரசுரிக்கப்படும்.

கருத்துப் போட்டி நிபந்தனைகள்:—

(1) கருத்துக்கள் எங்களுக்கு வந்து சேரவேண்டிய, கடைசி தேதி 10–2–86. அதன்பின் வரும் கருத்துக்கள் போட்டிக்கு ஏற்றுக்கொள்ளப்பட மாட்டா.

(2) போட்டியில் கலந்து கொள்பவர்களுக்கு வயது வரம்பு கிடையாது.

(3) போட்டியில்; ஆசிரியர் தீர்ப்பே முடிவானது. சட்டப்படி கட்டுப்படுத்த முடியாது.

(4) கீழே உள்ள பாரத்தை பூர்த்தி செய்து, "கருத்து"டன் சேர்த்து அனுப்ப வேண்டும். அது இல்லாமல் வரும் கருத்துக்கள் ஏற்றுக்கொள்ளப் படமாட்டா.

---




கருத்துப் போட்டி எண்: 31

பெயர்: ........................................

முகவரி: ........................................

........................................

........................................

........................................

முகவரி:—
கருத்துப் போட்டி,
"ராணி காமிக்ஸ்",
1091, பெரியார்
நெடுஞ்சாலை,
சென்னை–600 007.

போட்டி நிபந்தனைகளுக்கு கட்டுப்படுகிறேன்.

........................................

(கையொப்பம்)

கீழே உள்ள படத்தை 5 விநாடி மட்டும் பார்த்துவிட்டு, பார்த்தவை என்ன என்ன என்று ஒரு தாளில் எழுதவும். உங்கள் நினைவு ஆற்றலுக்கு கீழே "ஷொட்டு" கொடுக்கப்பட்டு உள்ளது!



20—ம் சரி:— அபார ஆற்றல்
15—19 சரி:— வெரிகுட்!
10—14 சரி:— பரவாயில்லை.
5—10 சரி:— உம்...!
0—4 சரி:— கோழி முட்டையின் கூட்டாளிகள்!

# ராணி காமிக்ஸ்

அடுத்த இதழில்..!



மாட்டு மந்தையை அபேஸ் செய்யும் பலே திருடர்களை பாய்ந்து பிடிக்க, ஷெரீப் துப்பறியும்,

## மேஸ்திரி கொலை!

முழுநீள சித்திரக் கதை!

**சித்ரா மணாளன்** எழுதும்,

## தொடர் கொலை!

திகில் தொடர்கதை!




ரூ.50 பரிசு: வாசகர் போட்டி!

படிக்கத் தவறாதீர்கள்!

**15.2.86-ல் வெளிவருகிறது!**

PRINTED AT RANI PRINTERS, MADRAS-7